ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**11 T I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2022(2023)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2022(2023)
**General Certificate of Education (Ord. Level) Examination, 2022(2023)**

| | |
|---|---|
| බුද්ධ ධර්මය **I, II**<br>பௌத்தம் **I, II**<br>Buddhism **I, II** | පැය තුනයි<br>மூன்று மணித்தியாலங்கள்<br>*Three hours* |

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
**மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்**
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

## பௌத்தம் I

**அறிவுறுத்தல்கள் :**

* எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
* **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
* **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் நீங்கள் தெரிவுசெய்த விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
* அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள ஏனைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** புத்தர் பெருமான் தனது முதலாவது தர்ம போதனையை நிகழ்த்திய இடத்தையும் அவரின் பரிநிர்வாணம் நிகழ்ந்த இடத்தையும் குறிப்பிடும் விடையைத் தெரிவு செய்க.
(1) லும்பினி சல் மலர்த் தோட்டம், உபவத்தன சல் மலர்த் தோட்டம்
(2) லும்பினி சல் மலர்த் தோட்டம், இசிப்பத்தனவின் மிகதாய
(3) இசிப்பத்தனவின் மிகதாய, சப்தபரணி குகை
(4) இசிப்பத்தனவின் மிகதாய, உபவத்தன சல் மலர்த் தோட்டம்

**2.** போதிசத்துவரின் சாந்தமானதும் ஒப்பிடமுடியாத வசீகரமானதுமான தோற்றத்தைக் கண்டு "இத்தகைய மகனை பெற்ற தாயும் தந்தையும் பாக்கியசாலிகள்" என்று கூறியவர்
(1) பிரபுவின் மகளான சுஜாதா (2) பிரஜாபதி கோதமி
(3) கிஸா கோதமி (4) மாகந்திய இராணி

**3.** நோயாளி ஒருவருக்கு வைத்தியரின் சேவையைப் போலவே பராமரிப்பவரின் சேவையும் முக்கியமானது என்று புத்தர் பெருமான் எடுத்துக்காட்டிய சந்தர்ப்பத்துக்கு உதாரணமாக அமைவது,
(1) சுனீதா கதை (2) சோபாக கதை
(3) மட்டகுண்டலி கதை (4) புத்திகத்ததிஸ்ஸ கதை

**4.** போர்க்களத்தில் உள்ள யானை பகைவரால் எவ்வளவுக்கு அம்பு பட்டாலும் பின்வாங்கிச் செல்லாதது போல புகழ்ச்சி, இகழ்ச்சியைக் கருத்திற் கொள்ளாது முன்னோக்கிச் செல்லும் திறன் புத்தர் பெருமானிடம் இருந்தது. இப்பண்பு
(1) புரிசதம்ம சாரதி குணம் எனப்படும். (2) தாதி குணம் எனப்படும்.
(3) மகாகருணா குணம் எனப்படும். (4) யதாவாதி ததாகாரி குணம் எனப்படும்.

**5.** நிர்வாணம் பற்றிய புரிந்துணர்வதற்கு அவசியமான கொள்கைகளைப் பாதுகாப்பதால் மகா சங்கத்தினர்
(1) சுபட்டிபன்ன எனப்படுவர். (2) உஜுபட்டிபன்ன எனப்படுவர்.
(3) ஞாயபட்டிபன்ன எனப்படுவர். (4) சாமீசிபட்டிபன்ன எனப்படுவர்.

**6.** புத்தர் பெருமான் வேற்று மத வழிபாட்டு இடங்களுக்குச் சென்றபோது மிகவும் கோலாகலமாக வரவேற்கப்பட்டார் என்று பெருமளவு சூத்திரங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனால் வெளிப்படுத்தப்படுவது அவரிடமிருந்த
(1) சமயப் பொறுமை (2) நடுநிலைப் பண்பு
(3) அசைக்கமுடியாத பண்பு (4) மகா கருணைப் பண்பு

[பக். 2 ஐப் பார்க்க

**7.** புத்தர் பெருமான் பிப்பெலி குகைக்கு வந்து சத்த போஜகண்டங்க தர்மத்தைப் போதித்த பின்னர் அதனைக் கேட்டு தனது நோய் நிலைமையிலிருந்து விடுபட்டவர்
(1) மகா காசியப்ப தேரர் (2) கிரிமானந்த தேரர்
(3) மகா முகலன் தேரர் (4) சுண்ட தேரர்

**8.** இயற்கைச் சூழலையே போதனை மண்டபமாக்கிய பல சந்தர்ப்பங்கள் கௌதம புத்தர் பெருமானால் பிரபல்யம் அடைந்துள்ளன. இதற்கேற்ப அவர் வேதனா பரிகிரக சூத்திரயவை போதித்த இடம்
(1) அசிரவதி நதிக்கரையோரத்தில் அமைந்திருந்த மாமரச் சோலையில்
(2) சம்பா நகருக்கு அண்மையிலான கக்கரா குளத்தின் அருகாமையில்
(3) கிஜ்ஜகுட்ட மலையில் சூகரகத குகையில்
(4) விசாலா தலைநகரின் காட்டுப் பகுதியில்

**9.** சித்தார்த்த போதிசத்துவர் நெக்கம்ம பாரமிதாவை சம்பூரணமாக்கிய விதத்தை வெளிப்படுத்தும் ஜாதகக் கதை எது?
(1) உலோமஹன்ச ஜாதகக் கதை (2) மகாதேவ ஜாதகக் கதை
(3) தேமிய ஜாதகக் கதை (4) மஹாகபி ஜாதகக் கதை

**10.** பேராசை, தவறான நம்பிக்கை என்பவற்றிலிருந்து விடுபட்டு கருணை, நுண்ணறிவுடன் சுயத்தினதும் ஏனையோரினதும் நன்மைக்காக மிகுந்த முயற்சி மேற்கொண்டு பூரணத்துவம் பெறும் பாரமிதா
(1) பிரக்ஜா பாரமிதா (2) வீர்ய பாரமிதா
(3) அதிஸ்டான பாரமிதா (4) க்ஷாந்தி பாரமிதா

**11.** புத்தர் பெருமான் கிரிமானந்த தேரருக்கு நோயினைத் தவிர்ப்பதற்கு ஏதுவான எட்டு விடயங்களைப் போதித்தார். அவ்விடயங்களுக்கு **உரித்தல்லாதது** எது?
(1) பித்த சமுத்தான (2) லோகித சமுத்தான
(3) உத்துபரிநாமஜா (4) கம்மா விபக்கஜ

**12.** புத்தர் பெருமான் "எவரேனும் பூந்தோட்டம், பழத்தோட்டம், காடுகள் வளர்த்தால் மரப்பாலம், நீர்க்குடில்கள், குளங்கள் என்பவற்றை அமைத்தால் அவர்கள் இரவு பகலாகப் புண்ணியம் பெறுவர்" என்று போதித்தது
(1) அனேபிண்டு செட்டி கேட்ட வினாவுக்கு விடையாகவாகும்.
(2) தோதெய்யபுத்திர சுப மானவகயா கேட்ட வினாவுக்கு விடையாகவாகும்.
(3) குறிப்பிட்டதொரு தெய்வம் கேட்ட வினாவுக்கு விடையாகவாகும்.
(4) விசாகா கேட்ட வினாவுக்கு விடையாகவாகும்.

**13.** இனம், மதம், கலாசாரப் பல்வகைமை கொண்ட இலங்கையின் மக்கள் சமூகத்தில் சகவாழ்வை ஏற்படுத்துவதற்கு **உரித்தல்லாத** விடயம் என்ன?
(1) எந்தவொரு சமயத்துக்கும் இனத்துக்கும் உரிய எவருக்கேனும் எத்தகைய தீங்கும் செய்யாதிருத்தல்.
(2) எல்லா இனத்தவர்களிடமும் நால்வகை விருந்தோம்பல் நடத்தை கொண்டிருத்தல்.
(3) வேற்றுமத வழிபாட்டிடங்களுக்கும் மரியாதை அளித்தலும் தீங்கு செய்யாதிருத்தலும்.
(4) எல்லா சமயங்களும் போதிப்பது ஒன்றே என்பதை ஏற்றுக்கொண்டு எல்லா சமயங்களுக்கும் மதிப்பளித்தல்.

**14.** "சுவாமி, நான் பல விடயங்களை மனப்பாடம் செய்துள்ளேன். எனினும் இப்போது அவற்றை நினைவுக்குக் கொண்டு வர முடியவில்லை அதற்கான காரணம் என்ன?" என்று பிராமணர் ஒருவர் கேட்டபோது புத்தர் பெருமான் போதித்தது.
(1) பஞ்சநீவரண தர்ம மனதில் செயற்படுவதால் நினைவுக்கு வருவதில்லை
(2) பாவச் செயலின் மூன்று வேர்கள் மனதில் செயற்படுவதால் நினைவுக்கு வருவதில்லை
(3) நான்கு அகதிகளுடன் செயற்படுவதால் நினைவுக்கு வருவதில்லை
(4) பஞ்சமாபாதகங்களில் ஈடுபடுவதினால் நினைவுக்கு வருவதில்லை

**15.** புண்ணிய தர்மத்தை விருத்தியாக்கும் மனதின் பயிற்சியே தியானம் எனப்படுகின்றது. இங்கு புண்ணிய தர்மம் என்பது
(1) ஆரோக்கியமானது, சரியானது, திறனுள்ளது
(2) பக்தியுள்ளது, புண்ணியமானது, சரியானது
(3) நல்லது, குணமானது, ஆரோக்கியமானது
(4) திறனுள்ளது, தர்மத்தை அறிந்தது, கீழ்ப்படிவுள்ளது

[பக். 3 ஐப் பார்க்க

288

16. சமத தியானம் மூலம் குறுகிய காலத்தில் உன்னத பலனைப் பெறுவதற்குப் பின்பற்ற வேண்டிய மிக முக்கியமான செயன்முறை
(1) நாற்பது தியான நோக்கங்களைக் கற்றல்.
(2) அறிவுறுத்தல்களுடன் நடத்தைக்குப் பொருத்தமான தியான நோக்கை பயிற்சி செய்தல்.
(3) தனியாள் நடத்தைப் பண்பை விளங்கிக் கொள்ளுதல்.
(4) தியானத்திற்கான முன்தேவைகள் மீது சிறந்த அறிவைப் பெறுதல்.

17. "உங்கள் சமய ஆசிரியரால் போதிக்கப்பட்ட கோட்பாடு யாது?" "காரணங்களும் நிபந்தனைகளும் காரணமாக எழுகின்ற விடயங்கள் காரணங்களும் நிபந்தனைகளும் முடிவடையும்போது முடிவடையும் என்று எனது ஆசிரியர் புத்தர் பெருமான் போதித்துள்ளார்" மேற்படி வினாவை கேட்டவர், அதற்கு மேற்குறிப்பிட்ட விடையைக் கூறிய இருவரும்
(1) சஞ்ஞய பிரிவஜ்ஜி, அஸ்ஸஜி தேரர்
(2) கோலித பிரிவஜ்ஜி, அஸ்ஸஜி தேரர்
(3) உபதிஸ்ஸ பிரிவஜ்ஜி, அஸ்ஸஜி தேரர்
(4) உபதிஸ்ஸ பிரிவஜ்ஜி, கொண்டக்ஜ தேரர்

18. நாம ரூப தர்ம காரணமாக ஆறு ஆயத்தனங்கள் (ஷடாயதன) தோன்றுகின்றன என்று பட்டிச்சமுப்பாத குறிப்பிடுகின்றது. இந்த ஆறு ஆயத்தனங்கனைக் காட்டுவது
(1) நாம, ரூப வேதனா, சன்னா, சங்கார, விக்ஞான
(2) ரூப, சப்த, கந்த, ரச, ஸ்பர்ச, தர்ம
(3) படவி, ஆபோ, தேஜோ, வாயோ, ஆகாஸ, சமுத்திர
(4) சக்கு, சோத, காண, ஜீவ்ஹா, காய, மன

19. மரணத்தின் பின்னரான வாழ்வை உறுதியாக்கும் உயிர்களின் முன்னைய பிறவி பிந்திய பிறவி நிலைத்திருப்பை அறிந்திருக்கும் ஞானம்
(1) புப்பே நிவா சானுஸ்ஸதி, சுதுபபாதஞானம்
(2) புப்பே நிவா சானுஸ்ஸதி, ஆஸவக்காய ஞானம்
(3) சுதுபபாத, இத்திவித ஞானம்
(4) திப்பசோத, பறசித்தவிஜானன ஞானம்

20. பௌத்த சமயத்திற்கேற்ப துக்கத்திலிருந்து விடுபடுவதற்கான பாதை அனுபூர்வ சிக்ஷா, அனுபுப்பகிரியா, அனுபுப்பபட்டிபாத ஆகும். இந்தப் படிமுறையான பயணத்தில் முதல்படி
(1) சமாதி (2) பிரக்ஞா (3) சத்தா (4) பாவனா

21. யானையின் அடிச்சுவட்டில் காட்டில் வாழும் எந்தவொரு விலங்கினதும் அடிச்சுவட்டை உள்ளடக்கக் கூடியதாக இருப்பதைப்போல நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக புத்தர் பெருமான் போதித்த தர்மம் உள்ளடங்கக்கூடிய பிரதான தர்மம்
(1) நால்வகை சதிபத்தான (2) நான்கு மேலான உண்மைகள்
(3) நான்கு சங்கிராக வஸ்து (4) நான்கு இத்திபாத

22. மரணத்தின் பின்னரான முதல் உயிர் வாழ்க்கையில் அல்லது அடுத்த பிறவியில் தாக்கம் செலுத்தும் கர்மா இனம் காணப்படுவது
(1) தித்த தம்ம வேதனீய கர்மா (2) உபபஜ்ஜ வேதனீய கர்மா
(3) அபராபரிய வேதனீய கர்மா (4) அஹோசி கர்மா

23. வேறு விலங்கு வகைகளில் உயிரியல் வேறுபாடுகள் காணப்படுவதற்கு காரணங்கள் பலவற்றைக் குறிப்பிட முடியுமாயினும் மனிதர்களிடையே அத்தகைய வேறுபாடுகளைக் குறிப்பிட முடியாது என்பதும் இலிங்க மற்றும் ஜாதி என்ற விதத்தில் மனிதர்களிடையே சமத்துவம் உள்ளது என்பதும் போதனை செய்யப்பட்டுள்ள சூத்திரய
(1) வசல சூத்திரய (2) கசீபாரத்வாஜ சூத்திரய
(3) வாசெத்த சூத்திரய (4) அக்கஞ்ஞ சூத்திரய

24. தானம், அறவழி நடத்தை ஆகிய மங்கள விடயங்கள் குறிப்பிடப்படும் மங்கள சூத்திர போதனை விடயம் அடங்கிய தெரிவு எது?
(1) "தானம் சீலம் பரிச்சாகம்" (2) "தானம் சீலம் ச பாவனா"
(3) "தானம் சக்கஸ்ஸ சோபணம்" (4) "தானம் ச தம்மசரியாச"

[பக். 4 ஐப் பார்க்க

**25.** சிகாலோவ சூத்திரயவில் குறிப்பிட்டுள்ளபடி துறவிகளினால் இல்லறத்தாருக்கு நிறைவேற்றப்படவேண்டிய கடமைகளில் **உள்ளடங்காதது**
(1) பாவங்களிலிருந்து தடுத்தல்.
(2) நன்மை தரும் செயல்களில் ஈடுபடுத்தல்.
(3) அன்பு கருணையுடன் பேசுதல்.
(4) சுவர்க்கம் அடைவதற்கான வழியைக் காட்டுதல்.

**26.** தனி நபரின் முன்னேற்றத்துக்கும் வீழ்ச்சிக்கும் ஏதுவான விடயங்களைக் குறிப்பிட்டுப் போதிக்கப்பட்டது
(1) மங்கல, வசல சூத்திரங்கள்
(2) மங்கல, சிகாலோவாத சூத்திரங்கள்
(3) மங்கல, பராபவ சூத்திரங்கள்
(4) பராபவ, வசல சூத்திரங்கள்

**27.** இல்லற வாழ்க்கையைக் கருத்திற் கொள்ளும்போது வாழ்க்கையும் சொத்துக்களும் பாதுகாக்கப்படுதல், குடும்ப வாழ்க்கையில் சமாதானமும் சந்தோஷமும் ஏற்படுதல், நம்பிக்கை, விவேகம், உடல்நலம் என்பன ஏற்படுதல் என்ற விடயங்கள் பாதுகாக்கப்படுவது
(1) தஸ புண்ணிய கிரியாவில் ஈடுபடுவதினால் ஆகும்.
(2) பஞ்ச சீல கொள்கை அடிப்படையில் செயற்படுவதினால் ஆகும்.
(3) திரிவித புண்ணிய செயல்களில் ஈடுபடுவதினால் ஆகும்.
(4) சதர சங்கிரஹவஸ்துவில் ஈடுபடுவதினால் ஆகும்.

**28.** "தமக்கு கெடுதியான நன்மைதராத விடயங்களைச் செய்வது மிகவும் இலகுவாகும். ஆனால் நன்மைதரும் நல்ல விடயங்களைச் செய்வது மிகவும் கடினமானதாகும்." இந்தக் கருத்துக்கள் அடங்கிய தம்மபத காதாவில் உள்ளடங்கிய முதல் இரண்டு வரிகளும்
(1) "அத்தனாவ கதம் பாபம் - அத்தனா சம்கிலிஸ்ஸதி"
(2) "யொ செ வஸ்ஸசதம் ஜீவே - துஸ்ஸீலோ அசமாஹிதொ"
(3) "சுகராணி அஸாதுனீ - அத்தனொ அஹிதானி ச"
(4) "நதுங் கம்மங் கதங் சாது - யங் கத்வா அனுதப்பதி"

**29.** புத்தியால் ஆராய்ந்து சிந்தித்து செயற்படுதல், நோயின் காரணத்தை பரிசீலித்து சிகிச்சை அளிக்கும் மருத்துவர் போல செயற்படுதல், சரியானது பிழையானது என்பவற்றை ஆராய்ந்து சரியானவற்றைச் செய்தல் என்னும் கருத்துகள் உள்ளடங்கிய தொடர் எது?
(1) சுசிகம்ம (2) நிஸம்மகாரி (3) சக்ஞத்த (4) தம்மஜீவி

**30.** புத்தர் பெருமானால் மனம்கவர் இடங்களாக வருணிக்கப்பட்ட நிகுரோதய, சௌர பிரபாதய, காலசீலாவ, சப்ப சொண்டிக பப்பஹாரய தபோதாராமய ஆகிய இடங்கள் அமைந்திருப்பது
(1) விசாலா மா நகரத்தில் (2) இரஜகஹ நகரத்தில்
(3) குசினாரா நகரத்தில் (4) சவத் நகரத்தில்

**31.** தீக நிகாயாவின் சக்கவத்தி சீஹநாத சூத்திரயவில் குறிப்பிட்டுள்ளபடி தல்ஹனேமி என்ற சக்விதி மன்னனுக்கு உரித்தான சப்தரத்தினங்களில் சக்ரரத்னவினால் குறிப்பிடப்படுவது
(1) அரசுரிமை (2) அரசனின் வாகனத்தின் சக்கரம்
(3) சக்கிராவாட்ட (4) இராச்சியத்தின் பாதுகாப்பு

**32.** அரச ஆட்சி பற்றிய பௌத்த கோட்பாடுகளை விளக்கும் சில கூற்றுகள் கீழே தரப்பட்டுள்ளன.
A - அரசை ஆட்சிசெய்வோர் ஒற்றுமையுடன் செயற்பட வேண்டும்.
B - அரசினுள் நேர்மையற்ற செயற்பாடுகளைக் கட்டுப்படுத்தல் வேண்டும்.
C - சட்டமும் ஒழுங்கும் தடையின்றிப் பாதுகாக்கப்பட வேண்டும்.
D - நிபுணத்துவமுடையவர்களிடம் அறிவுரைகள் பெறப்படுதல் வேண்டும்.
இக்கூற்றுகளிடையே சப்த அபரிஹானி தர்மவிற்கு உரித்தான கூற்றுகள் அடங்கிய விடையைத் தெரிவுசெய்க.
(1) A மட்டும் (2) A உம் C உம் (3) B உம் C உம் (4) C உம் D உம்

**33.** வெலிவிற்ற அசரண சரண ஶ்ரீ சரணங்கர சங்கராஜ மகா தேரரினால் எழுதப்பட்ட நூல்களில் **அடங்காதது**
(1) முனிகுணாலங்காரய (2) புதுகுணாலங்காரய
(3) சாரார்த சங்கிரக (4) சதரபணவரசன்ன

[பக். 5 ஐப் பார்க்க

**34.** ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் வீழ்ச்சியடைந்திருந்த பௌத்த கல்வி, பௌத்த சமயம் என்பன எழுச்சி பெறுவதற்கு தேசப்பற்றுமிக்க குழுவுடன் ஒன்றிணைந்து பரம விஞ்ஞானார்த பௌத்த சங்கத்தைத் தாபித்தவர்
(1) மீகெட்டுவத்தே குணானந்த தேரர் (2) ஹிக்கடுவை ஸ்ரீ சுமங்கல தேரர்
(3) அநாகரிக தர்மபாலா (4) ஹென்றி ஸ்ரீல் ஒல்கொட்

**35.** பஞ்சசதிகா சம்கிதிய எனப்படுவது
(1) முதலாவது பௌத்த மகாநாடு (2) இரண்டாவது பௌத்த மகாநாடு
(3) மூன்றாவது பௌத்த மகாநாடு (4) நான்காவது பௌத்த மகாநாடு

**36.** மூன்றாவது பௌத்த மகாநாட்டின் விளைவுகளுக்கு **உரித்தல்லாத** விடயம்
(1) அபிதர்ம பிடகத்துக்கு கதாவத்துப்பகரணய இணைக்கப்படுதல்
(2) துர்நடத்தை துறவிகளை சங்கத்திலிருந்து துரத்துதல்
(3) தர்மத்தை வாய்மொழி மூலம் பாதுகாக்க பாணக பரம்பரைக்கு ஒப்படைத்தல்
(4) உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் தர்மப் பிரசாரம் நிகழ்ந்தமை

**37.** தொல்பொருளியலாளர்களின் கருத்துப்படி புத்தர் சிலை வடிவமைத்தல் ஆரம்பமானது
(1) கி.மு. முதலாம் நூற்றாண்டு (2) கி.மு. மூன்றாம் நூற்றாண்டு
(3) கி.பி. முதலாம் நூற்றாண்டு (4) கி.பி. மூன்றாம் நூற்றாண்டு

**38.** இலங்கையில் பௌத்தம் தாபிக்கப்பட்டதுடன் தேவநம்பியதீச மன்னனால் கட்டப்பட்ட தூபராம தாதுகோபத்தில் வைக்கப்பட்டது புத்தர் பெருமானின்
(1) கழுத்து தாது (2) வலப்பக்க தோள்பட்டை எலும்பு
(3) நெற்றியின் தாது (4) இடதுபக்க தோள்பட்டை எலும்பு

**39.** தூபிக்காக கட்டப்பட்ட வட்டவடிவ கூரையுடனான மண்டபம் சேதியகர அல்லது வட்டதாகே எனப்படும். புராதன இலங்கையின் கலைநுட்பம் மிக்க வட்டதாகே அமைந்திருக்கும் இடம் எது?
(1) தூபராமயவில் (2) அம்பஸ்தலவில்
(3) இலங்காராமயவில் (4) மெதிரிகிரியாவில்

**40.** இலங்கையில் பௌத்த ஓவியக் கலையில் இந்திய மரபு பெரிதும் செல்வாக்குச் செலுத்தியுள்ளது. இந்த வகையில் இந்தியாவின் புராதன அஜந்தா ஓவியங்களுடன் தொடர்புடைய ஓவியங்கள் காணப்படுவது
(1) தம்புள்ளை விகாரை ஓவியங்களில் (2) சீகிரிய ஓவியங்களில்
(3) களனி விகாரை ஓவியங்களில் (4) திம்புலாகலை ஓவியங்களில்

* *

[பக். 6 ஐப் பார்க்க

**11 T I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2022(2023)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2022(2023)
General Certificate of Education (Ord. Level) Examination, 2022(2023)

බුද්ධ ධර්මය I, II
பௌத்தம் I, II
Buddhism I, II

## பௌத்தம் II

* **முதலாம்** வினாவும் வேறு **நான்கு** வினாக்களும் உட்பட **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.
* முதலாம் வினாவின் விடைக்கு **20** புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் **10** புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

**1.** (i) சித்தார்த்த போதிசத்துவர் உண்மையைத் தேடுவதில் ஈடுபட்ட காலத்தில் (கின் குசல கவேசி) சந்தித்த பேறு பெற்ற துறவிகள் **இருவரின்** பெயரை எழுதுக.

(ii) 'அரகம்' புத்தர் பண்பின் கருத்தை எழுதுக.

(iii) லோமஹன்ச ஜாதக கதையில் போதிசத்துவரால் பூரணப்படுத்தப்பட்ட எந்தப் பாரமிதா வெளிப்படுத்தப்பட்டுள்ளது?

(iv) சமத தியானத்தினால் பெறக்கூடிய **இரண்டு** நன்மைகளைக் குறிப்பிடுக.

(v) "தானம் சீலம் ச நெக்கம்மங்" இந்த வரிகளில் குறிப்பிடப்படும் தர்ம விடயங்கள் யாவை?

(vi) மூவகைப் பயிற்சியின் (திரிசிக்ஷா) பெயரைக் குறிப்பிடுக.

(vii) "சுசுகங்வத ஜீவாம - வேரினேசு ஆவேரினொ" இந்த வரிகளின் கருத்தை எழுதுக.

(viii) தூபியின் **நான்கு** பகுதிகளின் (ஸ்தூபாங்க) பெயர் தருக.

(ix) "சங்கார நிரோதா விஞ்ஞான நிரோதொ" இதன் கருத்தை விளக்குக.

(x) ஸ்ரத்தாவின் **இரண்டு** வகைகளின் பெயர் தருக.

**2.** (i) வியக்கபஜ்ஜ சூத்திரயவில் குறிப்பிட்டுள்ளவாறு தனிமனிதனின் இவ்வுலக நன்மைக்காக இருக்கும் விடயங்களில் **இரண்டினை** எழுதுக.

(ii) மேலே (i) இல் குறிப்பிட்ட விடயங்களில் **ஒரு** விடயத்தை விளக்குக.

(iii) கடமைகளை நிறைவேற்றும் சாத்வீகமான சமூகத்தைக் கட்டியெழுப்புவதற்கு பஞ்சபலி எண்ணக்கரு உதவி புரியும் முறையினை விளக்குக.

**3.** (i) "நத்தங் கம்மங் கதங் சாது" இந்த தம்மபத செய்யுளை பூரணப்படுத்தி எழுதுக.

(ii) இந்த செய்யுளின் கருத்தை எழுதுக.

(iii) "பாவங்களிலிருந்து விலகி புண்ணியச்செயல்களில் ஈடுபடுதலினால் இரு உலக வாழ்க்கையையும் வெற்றிகரமானதாக்குவதற்கு தம்மபத அறிவுரைகள் வழங்குகிறது." பகுப்பாய்வு செய்க.

**4.** (i) தசராஜ தர்ம என்பதில் அடங்கியுள்ள **இரண்டு** விடயங்களின் பெயர் தருக.

(ii) நான்கு வகை விருந்தோம்பல்களைச் (சத்தரசங்கிரகவஸ்து) குறிப்பிட்டு, அவற்றுள் **ஒன்றை** விளக்குக.

(iii) நேர்மையான அரசாட்சிக்கு பௌத்த அரசியல் கோட்பாடுகள் உதவும் முறையினை விவரிக்குக.



[பக். 7 ஐப் பார்க்க

5. (i) பஞ்ச நியாம தர்மத்தில் **இரண்டின்** பெயர் தருக.

(ii) விளைவுகள் தரும் விதத்துக்கு ஏற்ப கர்மத்தின் வகைகள் **நான்கினைக்** குறிப்பிட்டு, அவற்றுள் **ஒன்றினைச்** சுருக்கமாக விளக்குக.

(iii) மாணவர் வாழ்க்கையின் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு பட்டிச்சசமுப்பாத கோட்பாடுகளைப் பயன்படுத்தக்கூடிய விதத்தினை விளக்குக.

6. (i) இரண்டாவது பௌத்த மகாநாடு நடைபெறுவதற்குக் காரணமான விடயங்களில் **இரண்டினை** எடுத்துக் காட்டுக.

(ii) இந்த மகாநாடு நடைபெற்ற இடம், அரச அனுசரனை வழங்கிய ஆட்சியாளன், தலைமைத்துவம் வழங்கிய மகாதேரர் ஆகியோரைக் குறிப்பிடுக.

(iii) இரண்டாவது பௌத்த மகாநாட்டின் விளைவானது பௌத்த சாசன வரலாற்றின் மீது ஏற்படுத்திய செல்வாக்கினை விளக்குக.

7. பின்வரும் தலைப்புகளில் எவையேனும் **இரண்டிற்குச்** சிறுகுறிப்பு எழுதுக.

(i) ரேறுக்காணே சந்தவிமல தேரர்

(ii) மைத்திரி தியானம்

(iii) சம்மா ஆஜிவ (சரியான சீவனோபாயம்)

(iv) புத்தர் சிலை

* * *

